உ

தாய்மொழி தழைக! தாயகம் வாழ்க!!

# தமிழணங்கு.

ஒரு மதிமுகத் தாள்.

" அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே."

மலர் க. | விக்கிரம - மாசி. | இதழ் ௰௧.

## வாழ்த்து.

கமழ்மணங் கிளரும்வாகைக் காவலன் செங்கோல் வெல்க!
இமிழ்முர செழிலி பெய்க! யாவரும் யாவும் உய்க!
அமிழ்துறழ் மகளிர் கற்பா ரணிதமி ழணங்கு வாழ்க!
தமிழ்வலந் திகழ்ந்தூ ழூழி தமிழரண் தழைக! நன்றே!

## தமிழணங்கு வணக்கம்.

அடுக்கு மிடுக்கட் பெருப்படுகர்
அடிமைக் குழைக்கு மிடிச்சேற்றின்
அமிழுங் குழவி அனையேனை
அன்னாய்! நின்மே கலைமடிமேல்
கிடக்கும் படிகைந் நிலைதந்துன்
கேண்மை கெழுமுப் பாலமுதங்
கிளக்குந் திறத்துத் தாலமிசை
கிளர்நல் லறத்துப் பாலடைவாய்
மடுக்க மடமை படக்கிடத்தி
வருநா லடியிற் றவழ்ந்துபுகழ்
மருவுங் குதலைக் குறுந்தொகையுண்
மகிழ்விற் பழகி நடலையற
நடக்குமியல் நற்றிணை யோர்ந்து
நலமே வளர்த்தின் புறவருள்வாய்!
நவிலும் வளங்கொள் தமிழரணம்
நளினம் விளங்குந் தமிழணங்கே!

ஆ. மா. சிவஞானம்.

# தமிழணங்கு வணக்கத்தின் அருஞ்சொல் விளக்கம்.

கருத்து:—தமிழணங்கே! அடியேன் இடுக்கண் என்னும் பெரும் பள்ளத்தில் வீழ்ந்து வறுமைச் சேற்றில் அமிழுங் குழவியாயினேன். என்னை நின் கையால் எடுத்து நின் மேகலை அணிந்த மடிமேற் கிடத்தி, பாலூட்டித் தாலாட்டி யான் நலமுற வளர்ந்தின்புற அருள்வாய் என்பதாம்.

இடுக்கட் பெரும்படுகர்—துன்பமென்னும் பெரும்பள்ளம், அடிமைக் குழைக்கும்—அடிமைக்கு உழைக்கக்கூடிய அல்லது அடி—அப்பள்ளத்தி னடியில், மை—கருநிறமாக, குழைக்கும்—குழப்பப்படும். அடி—அடியினால் என்றுமாம். மிடிச் சேறு—வறுமைச் சேறு. மேகலை மடிமேல்—மேகலாபரண மணிந்த மடிமேல். ஈண்டு மணிமேகலை என்ற நூற் பெயரைப் பின்மொழி கொண்டு வருவித்தமை காண்க. கைந்நிலை—கையின் உறுதி. தந்து — கொடுத்து. தந்து நூலுமாம். கைந்நிலைத் தந்தின் கேண்மை என அமையின் கைந்நிலை என்னும் நூலின் கேண்மை எனப்படும். கைந்நிலை என்னும் நூல் தற்காலம் கிடைக்கப்பெருமையால் அவ்வாறு வரைய நேர்ந்தது. கேண்மை—கண்ணோட்டம் அல்லது நட்பு. கெழுமு பால் அமுதம்—பொருந்தும் பாலாகிய அமுதம். கெழுமுதல்—பொருந்துதல். கெழும் முப்பால் அமுதம்—பொருந்தும் முப்பாலாகிய அமுதம். ஈண்டுத் திருக்குறளை யுணர்த்தியமை காண்க. தாலமிசை, தாலம் இசை—தாலாட்டு அல்லது உலகம் போற்றும், அல்லது தாலம் மிசை—உலகத்தில். அறத்துப் பாலடை வாய் மடுக்க—அறமாகிய பாலடையினால் வாயில் உட்கொள்ள அல்லது அறத்துப்பால் அடைவாய் மடுக்க—ஷை முப்பாலில் அறத்துப் பால் முதலாக முறைப்படி உட்கொள்ள, மடமைபடக் கிடத்தி—அறியாமை ஒழியும்படி கிடத்தி, நாலடியில் தவழ்ந்து—நான்கடியின் நிலையில் தவழ்ந்து அல்லது நாலடியார் என்னும் நூல் முறையில் ஒழுகி, குதலைக் குறுந்தொகை பழகி—மழலை மொழியாகிய சிறு சொற்றொகுதிகள் பயின்று அல்லது குதலையாகக் குறுந்தொகை என்னும் நூலைப் பயின்று, நற்றிணை யோர்ந்து—நல்லொழுக்கத்தை அறிந்து அல்லது நற்றிணை என்னும் நூலை அறிந்து. நடலை அற—வஞ்சனை கெட. நளினம்—தாமரை, ஈண்டுத் திருவடியை உணர்த்தும்.

இச் செய்யுளில் அவ்வந் நூற் பெயர்களைக் குழவியின் அவ்வத் தகுதிக்கேற்ப வழங்கியமை காண்க.

# ஆர்க்காடு மௌனகுரு சுவாமிகள் 20-வது ஆண்டு குருபூஜை.



நம் தமிழகம், பண்டை நாட்களில், சிறந்த பத்தர், சித்தர், பரமயோகியர், முத்தர், மோனியர் முதலிய ஞானவான்களின் தாயகமாக விளங்கியது. நாம் தற்காலம், மிகவும் நவீனம் என்று மதியீனமாக வியக்கும் அற்புதப் பொருள்கள் யாவும், அக்காலத்தில் நம் முன்னோர், தம் நாண்முறை வாழ்வில் பயின்றுவந்த எளிய பொருள்களாகவே இருந்தன. நாடெங்கும் நலமே விளங்கிருந்தது. நாளடைவில் அம் மேலோர்களின் கூட்டுறவு குறையக் குறைய, எங்கும் பூசலும் பொருமலும் மலிந்து, தற்கால நிலை நிலவியது. நம் மக்கட்கு மேலோர்மாட் டிருந்த பேரன்பின் குறைவே இவையனைத்திற்குங் காரணமாம். பழமையில் நமக்கிருந்த அறிவொழுக்கங்களும், ஆன்றோர்ப் பேணும் ஆர்வமும் புதுப்பிக்கப் பெற்றால் நம் நாடு நலம்பெறுவது திண்ணம். இவ்வுண்மையைக் கண்கூடாக உணர்ந்த, உயர்சைவப் பெருந்திருவாளர் திரு. வே. உ. திருவேங்கடசாமி முதலியார் அவர்கள் ஆர்க்காட்டில் திருக்கோயில் கொண்டருளும் மௌனகுரு சுவாமிகளுக்கு என்றும் வழுவா உழுவலன்பு பூண்டு வழித்தொழும் பொழுகி, இயன்றவாறு நித்திய நைமித்தியத் திருப்பணிகளைக் கடைப்பிடித்து ஆண்டுதோறும் குருபூசைத் திருவிழா நடத்திப் பற்பல அரும்பெருந் தொண்டுகளாற்றி வருகின்றார். அவ்வகையில் அண்மையில் நிறைவேறிய இருபதாவதாண் குருபூஜை விழாவானது விக்ரம ஆண்டு தைத் திங்கள் 28உ திங்கட்கிழமை (10—2—41) விடியற்காலை தேவாங்க வீதி, திருக்கண்ணன் சபையார் மௌன குருமூர்த்திகளுக் கெனப் பாலாற்றிலிருந்து பேரன்புடன் திரட்டிக் கொணர்ந்த திருமஞ்சன வரிசையை ஷை சுவாமிகளின் ஆஸ்ரம ஸ்தாபக பரிபாலனராகிய திரு வே. உ திருவேங்கடசாமி முதலியார் அவர்கள் தெண்டனிட்டு எதிர்கொண் டழைத்து வரவேற்க, சுவாமிகளுக்கு மஹா அபிஷேக அலங்கார தூபதீப நைவேத்திய ஆராதனைகள் வெகு சிறப்புற நிகழ்ந்தன. ஸ்ரீ மௌன குரு சுவாமிகளைப் பற்பல அன்பர்கள் பூமாலைகளாலும், பாமாலைகளாலும் ஆனந்தக்கண்ணீர் ததும்பப் பூசித்தும் போற்றியும் பரவிய சூழுவிடை எழுந்த ஹர ஹர என்னும் முழக்கொலி வானளா

வியது இத்திருநெறித் தொண்டர்குழாத்தின் காட்சி கண்டோர் கண்ணையும் கருத்தையும் என்றென்றும் விட்டகலாது. பஞ்ச புராணம் முடிந்ததும் திருமடத்து வாழ்த்துப் பதிகம் பாடப் பெற்றது.

பிற்பகலில் மகேசுர பூஜை வெகு சிறப்புற நடந்தேறியது. அன்றுமுதல் மூன்று நாட்களும் அவ்வாசிரமத்துக்கு மஹா சிர மத்துடன் பசித்துப் பரிந்துவந்த மன்பதைகள் அனைத்தும் புசித்துப் பேரின்புற்றன.

அம்மூன்று நாட்களும் சொற்பொழிவுகள் நிகழுந்தோறும் அவ்வவ்வமயங்களில் தேவாரம் வேலூர் திரு. M. கணேச முதலியார் அவர்கள் திருமுறை ஓதினர். காஞ்சி, தேவாரம் திரு. அருணசல முதலியார் அவர்கள் திருப்புகழ் முதலியன பாடினர்.

இரண்டாநாள் சென்னை திரு. கன்னைய பாகவதர் அவர்கள் இன்னிசைக் கருவிகளுடன் துருவன் சரித்திரம் பிரசங்கித்தார். குடியேற்றம் ஸ்ரீலஸ்ரீ கார்மேக சுவாமிகள் அவர்கள், ஞான வள்ளல் எனும் பொருளுரையும், காட்டுக்காநல்லூர் பிரசங்க மணி திரு. சுந்தர உடையார் அவர்கள் மணிவாசகர் உள்ளம் எனும் பொருளுரையும், மஹா வித்துவான் வல்லம் திரு. வைத்தியலிங்கம் பிள்ளை அவர்கள் மனிதரினும் மனிதருண்டு எனும் பொருளுரையும், செங்கம் தலைமைத் தமிழாசிரியர் வித்வான் ஔவை. திரு. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் சிறிய பெருந்தகை எனும் பொருளுரையும், ஆரணி செந்தமிழ்ப் பேரா சிரியர் திரு. வே. ஐயா நாயகர் அவர்கள் திருவள்ளுவர் எனும் பொருளுரையும், ஆரணி தலைமைத் தமிழாசிரியர் திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள், மோனமென்பது ஞான வரம்பு எனும் பொருளுரையும் விரித்துரைத்தார்கள். மூன்று நாள் சென்னை சைவ சித்தாந்தசமாஜக் காரியதரிசி திரு. ம. பால சுப்ரமணிய முதலியார் அவர்கள் B.A., B.L., தலைமை தாங்க, ஸ்ரீமான் மல்லைய தாஸ் பாகவதர் அவர்கள் இயற்றிய ஸ்ரீ மௌன குரு சுவாமிகள் பதிகமும், கீழ்விஷாரம் திரு. ச. த. முனிசாமி நாயகர் அவர்கள் இயற்றிய ஷை சுவாமிகள் கீர்த்தனையும் அரங் கேற்றல் முதலிய நிகழ்ச்சிகள் சிறப்புற நிகழ்ந்தன.

முடிவில் ஷை ஆஸ்ரம ஸ்தாபக பரிபாலனர் திருவேங்கட சாமி முதலியார் அவர்கள் அனைவர்க்கும் வந்தனோபசாரங் கூற, மௌன குருமூர்த்திகளின் இருபதாவதாண்டு குருபூஜை இனிதே நிறைவேறியது.

ஆசிரியன்.

---

249

உ

திருச்சிற்றம்பலம்

# நற்றிணைச் சிற்றாராய்ச்சி

## முல்லை

வித்துவான்

**திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்,**

தலைமைத் தமிழாசிரியர், போர்டு ஹை ஸ்கூல், ஆரணி.

ஆதிப் பிரான் அமரர்க்கும் பரஞ்சுடர்
சோதி அடியார் தொடரும் பெருந்தெய்வம்
ஓதி உணரவல் லோம்என்பர் உள்நின்ற
சோதி நடத்துந் தொடர் வறி யாரே.

இறைவன் உயிர்களை ஆட்கொள்ளவேண்டித் தன் அறிவு வடிவை ஒலிவடிவிலேற்றித் தக்க சான்றோர் வழியாகக் கொடுத்தருளினான். அச் சான்றோர் இறைவன் ஆணைவழி நின்று அருளிய மொழிகளே உணர்வு நூல்கள். அவை ஒலிவடிவமும், வரிவடிவமும் உடையனவாயிருந்து உயிர்கள் தூய அறிவுவடிவம் அடையும்வரை உதவுகின்றன. வரிவடிவைப்போல் ஒலிவடிவும் அழிவதென்றும், அழியாததென்றும் கூறும் இருதிறத்தினரும் ஒலிவடிவைத் துணையாக்கொண்டே அறிவு வடிவையுறும் உண்மையில் வேறுபட்டிலர்.

உயிர்க்குச் செவிப்புலனாகும் ஒலிவடிவும் கட்புலனாகும் வரிவடிவும் ஆகிய இரண்டும் செம்மையாக அமையப்பெற்றுள்ளதே சிறந்த மொழி. அத்தகைய மொழிகளுள் தமிழ்மொழியும் வடமொழியும் நம் முன்னோராற் சிறப்பித்துப் போற்றப்பெறுவன. இவ்விரண்டனுள்ளும் உயிர்கள் பேரின்பத்தை யெய்துதற்குரிய நெறியுணர்த்தும் நூல்கள் அளவிலாதுள.

உயிர்களின் நாட்டம் இன்பத்தின்கண்ணதே யாகும். அவ்வின்பம் உடல் முதலியவற்றோடு கூடிய நிலையிலும், அவற்றைப் பற்றறத் துடைத்த தூய நிலையிலும் உயிர்கட்குத் தோன்றும். அவற்றுள், பின்னைய தூயநிலைக்கண் உறும் இன்பமே அழியாத பேரின்பம் எனப்படும். சிற்றின்பந் துய்த்து வெறுத்த உயிர்கட்கே பேரின்ப நாட்டம் உறும். பேரின்பத்தை யுறவிழையும் உயிர்,

அதன் படிகளாக உள்ள ஒவ்வொன்றனிலும் பற்றுவைத்துப் பெற்று நுகர்ந்து, புதியதைத் தொட்டும், பழையதை விட்டும் தன்னைத் தூய்மைசெய்துகொண்டு போதல் வேண்டும். அம் முறையில் இம்மைப் பயனை யீயும் இன்பத்தை நாடி, இம்மை மறுமையாகிய இருமைப் பயனையளிக்கும் பொருளைத் தேடி, இம்மை, மறுமை, வீடு ஆகிய மும்மையும் உதவும் அறத்தைப் புரிதல் உயிர்க்கு இன்றியமையாததாம்.

அவ்வறம் இல்லறம், துறவறம் என்றிருவகைத்து. இவ் விரண்டனுள் துறவறமே சிறந்தது. அத்துறவறமும் எப்பிறப்பி லேனும் இல்லறம்புரிந்து முற்றப்பெற்றார்க்கன்றி வாய்க்காது. பிறன் பழிப்பதில்லாத துறவறம் பூண்பார்க்கு, இல்வாழ்க்கையில் முதிர்ந்த பயிற்சியில்லையேல், அது நிலையுதலில்லை. துறவறமும் அகத்துறவு, புறத்துறவு என்றிரு வகைத்து. இவற்றுள் முன்னை யதே பெரியதும் அரியதுமாகும். புறத்துறவும் அகத்துறவும் (அகத்து + உறவும்) கொண்டு வாழ்வோர் இந்நாளிற் பெரும்பான் மையோ ராதலின் உண்மையான அகத்துறவுடையார் எளிதிற் காணக் கிடைப்பாரல்லர். பற்றற்ற தூயநிலையிற் பெறற்பாலதாய பேரின்பம் அகத்துறவிக்கு உட்ளுள்ளபோதே உண்டாகும். அவ ரையே மெய்யுணர்ந்தா ரென்பர் ஆன்றோர். மெய்யுணர்ந்தார்க் கன்றி வீட்டின்பம் உண்டாகாது. மெய்யுணராதார் அது பெற விழைவரேல், முதலில் மெய்யுணர்வுபெற முயலுதல் வேண்டும். வினை வேறுபாட்டால் உயிர்கள் வீடுபெறும் நெறி வேறுபாடு உண்டாதலின், எல்லா உயிர்க்கும் மெய்யுணர்ச்சியால் வீடு பெறு தல் வாய்ப்பதரிது. சில உயிர்களே இருவினையொப்பு முதலியன உற்று மெய்யுணர்வான் வீடுபெற நிற்பன. அல்லாத உயிர்க ளனைத்தும் பிற நெறிகளினின்று ஒழுகி மெய்யுணர்வு பெறற் பாலன. திருநாவுக்கரசு நாயனாரும்,

> "ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்
> ஞானத் தால்தொழு வேன்உனை நானலேன்
> ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
> ஞானத் தாய்உனை நானுந் தொழுவனே."

என மெய்யுணர்வி னருமையை யுணர்த்தி யருளியிருத்த லறிக. உயிர்கள் மெய்யுணர் வுற்றுப் பேரின்ப மெய்துதல் எளிதி னியலாமையைக் கருதி, அவ்வுணர்வு தோற்றும் இயற்கையதாகிய அன்பு நெறியை யுணர்த்தினர் சான்றோர். மெய்யுணர்வைப்

போன்று வீடுபேற்றுக்கு நேரே அன்பு துணையன்றாயினும், அம் மெய்யுணர்வாகிய நன்னெறிக்குத் துணையாதலிற் சிறிதும் ஐய மில்லை. (சிவஞான சித்தியார் பா. 278—279 உரை காண்க).

அன்புறுதற் பொருட்டே உயிர்க்கு உடம்பின் தொடர்புண் டாயிற்று எனத் திருவள்ளுவர்,

"அன்போடியைந்த வழக் கென்ப ஆருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு"

என்னுந் திருக்குறளிற் புலப்படுத்தியருளினர். வாழ்க்கைத் துணை, மக்கள் முதலிய தொடர்புடையார்மாட் டுண்டாகும் காதல், உயிர்க்குத் தான் வேண்டிய பொருளின்கண் தோன்றும் வேட்கை, மனைவியர்கண்ணும், தாய், தந்தை, புதல்வர் புதல்வியர் முதலிய சுற்றத்தினர்கண்ணும் உளமகிழ்ச்சி நிகழ்த்திப் பிணிப்பித்து நிற்கும் நேயம் எனப் பண்டைய புலவர் தத்தம் உரைகளில், அன்பிற்கு விளக்கங் கூறினர். இல்வாழ்க்கையின் பண்பாய அன்பானே பயனுப அறத்தை யெய்துதல் வேண்டும். அன்பு இன்றேல் அற மின்று. அறம் இன்றேல், பொருளும், இன்பமும், வீடும் முறையே பெறல் இல்லை. முகனமர்ந்து அறத்தையோம்புவார்கண் அன்றோ செய்யாள் அகனமர்ந் துறைவாள்? இத்தகைய அறப்பயனுடைய அன்பு வாழ்வு நிகழ்த்தித் தொடர்புடையாரிடத்து அன்புசெலுத் திய பயிற்சி மிகுதிப்பாட்டாற் பல்லுயிரிடத்தும் ஆர்வமுடைமை யையும், இன்சொல்லுடைமையையும் பெற்றுப் பகையும், நொது மலும் போக்கி, நண்பென்னும் நாடாச் சிறப்புற்றுப் பேரின்பம் எய்துதல் வேண்டும்.

"யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்றும் இலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கும் மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தனம் ஆகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை யிகழ்தல் அதனினும் இலமே." (புற. 192)

என்னும் பெறலரும் பெருநிலையை யெய்திப் பேரின்பத்தை உட லுள்ள போழ்தே அடைவிப்பதிற் சிறந்த துணையாவது அன்பே என்பதை நன்குணர்ந்த பண்டைய சான்றோர் அனைவரும் அஃ தொன்றனைமட்டும் மற்றெல்லாவற்றினும் பெரிதென நாடுமாறு வற்புறுத்தி யுள்ளனர். சிறந்த யோகியரான மாமூலனார் பாட் டொன்றனுள், "பெரும் பேரன்பினர்" (அகம் 91) என ஒரு தொடர், தோழி தலைவனைக் குறித்த இடத்துளது. அத்தொடர், தலைவனது அன்பின் மிகுதிப்பாட்டையும் அதன் இன்றியமை யாமையையும் உணர்த்தி நிற்றல் உணர்க. திருமூல நாயனார் என்னும் பெரிய சிவயோக மாமுனிவரும் அன்பின் சிறப்பை "அன்பே சிவம்" என்றும், "அன்பினுள்ளாகி அமரும் அரும் பொருள், அன்பி னுள்ளார்க்கே அணைதுணையாமே" என்றும், "அன்போடுருகி அகங்குழைவார்க் கன்றி என்போல் மணியினை யெய்தவொண்ணாதே" என்றும், "புணர்ச்சியுள் ஆயிழைமேல் அன்புபோல உணர்ச்சியுள் ஆங்கே ஒடுங்கவல்லாருக்கு உணர்ச்சி யில்லாது குலாவி உலாவி அணைத்தலும் இன்பம் அது இது வாமே" என்றும் விரித்தருளினர். "புணர்ச்சியுள் ஆயிழைமேல் அன்புபோல" "மகட்குத் தாய் தன் மணாளனோ டாடிய சுகத் தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே," எனச் சிற்றின் பத்தை யுவமமாக்கிய தறிக. ஞானிகளும், யோகிகளும் அன்பின் சிறப்புணர்த்தியதற் களவிலாத மேற்கோளுள. இவற்றால் அன்பு நெறியின் பெருமை யுணர்த்தல் ஒன்றே அவர்தம் குறிக்கோ ளாகும். இத்தகைய அன்பும் இதனாலாம் நட்பும் பிறவிதோறும் தொடர்வதை நல்லிசைப் புலவர் பலர்,

"இம்மை மாறி மறுமை யாயினும்
நீயாகிய ரெங்கணவனை
யானாகியர்நின் நெஞ்சு நேர்பவளே"

"பயிலியது கெழீஇய நட்பு"

"இன்றை யன்ன நட்பின் இந்நோய்
இறுமுறை யென வொன் றின்றி
மறுமை யுலகத்து மன்னுதல் பெறுமே"

"ஒண்படைக்
கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்
பொருது புண் நாணிய சேரலாதன்

அழிகள மருங்கின் வாள் வடக்கிருந்தென
இன்னு இன்னுரை கேட்ட சான்றோர்
அரும்பெற லுலகத் தவனொடு செலீஇயர்
பெரும் பிறிதாகி யாங்கு"

"ஈங்கோ
சாத லஞ்சேன் அஞ்சுவல் சாவிற்
பிறப்புப் பிறிதாகுவ தாயின்
மறக்குவேன் கொல் என் காதலன்எனவே."

என்பவற்றுனும், பிறவற்றுனும் இனிது விளக்கினர். மாணிக்க வாசகப் பெருமானுர் அருளிய திருக்கோவையாருள்ளும் இது

"குறப்பாவைநின்குழல்வேங்கையம்போதொடுகோங்கம்விராய்
நறப்பாட லம்புனை வார்நிணை வார்தம் பிரான்புலியூர்
மறப்பா னடுப்பதோர் தீவினை வந்திடிற் சென்றுசென்று
பிறப்பா னடுப்பினும் பின்னுந்துன் னத்தகும் பெற்றியரே."

என உணர்த்தப்படுதல் காண்க. இதுகாறும் வீடுபேற்றிற்கு மெய்யுணர்ச்சியும், அம்மெய்யுணர்ச்சிக்கு அன்பு நெறியும் வேண்டும் என்பதும், மக்கட்கு இயற்கையிலுள்ள அன்பு நெறியை வளர்க்கத்தக்க அகப்பொருட் செய்யுட்கள் அளவிலாதனவாக நல்லிசைப் புலவர் பலரானும் இயற்றப்பட்டன என்பதும் குறித்தாம்.

இத்தகைய அன்பில்லாவிடத்துக் களவு, கற்பொழுக்கங்கள் நடைபெறு. (களவியல் சூ. 60 உரை). அன்பு நெறியை உணர்த்தும் முறையிற் பெருஞ் சிறப்புவாய்ந்த நூல்கள் நம் தமிழ்மொழியில் இப்பொழுதுள்ளவை சிலவேயாம். அவற்றுள்ளும் பொருளியலை யுணர்த்துவது தொல்காப்பியம் ஒன்றே. அதன் அதிகாரம் மூன்றனுட் பொருளை யுணர்த்துவதொன்றே. அதுவும் அன்பு நெறியாகிய அகநெறிக்கும், அதைச் சார்ந்த பிறநெறியாகிய புறநெறிக்கும் வேண்டியவற்றின் குறிப்புக்களை விளக்கிநிற்பது. உலகிலுள்ள எந்நூலும் குறிப்புக்களே என்பது அறிஞர் கருத்து. பிற்போந்த இயல்நூல் அனைத்தும் அதனைக் குறைத்தும் மாற்றியும் உணர்த்துவனவாம். பழைய பாக்களையும், நூல்களையும், பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என முப்பிரிவாக்கினர். அளவிற் குறைந்த இவற்றையும் தமிழரெனக் கூறிக் கொள்வோருட் பலர். கற்க விழைவும் முயற்சியுமுறுதும், கற்றோ

ரைப் போற்றுதும், பண்டையோர் அன்புநெறியி லொழுகாதும், தம்மையுந் தலைவனையும் மறந்து வாணாளை வீணாளாக்கியும் பெறு தற்கரிய மக்கட் பிறப்பைப் பாழிற்போக்கியும் ஒழிகின்றனர்.

மேற்கூறிய பொருளியலுடையார் அகப்பொருளையும், புறப் பொருளையும் தனித்தனி எழுவகைப்படுத் துணர்த்தினர். அகப் பொருளேழும் "கைக்கிளை," "ஐந்திணை," "பெருந்திணை" என மூன்றாகச் சொல்லப்படும். தலை கடையுள்ள கைக்கிளைக்கும், பெருந்திணைக்கும் இடையில் ஐந்திணையை வைத்துக் காத்த சான்றோர் கருத்தை அன்பிலாத வன்புடை மாக்கள் உணரவல் லாரல்லார். "அன்பின் வழியது உயிர்நிலை" என்பதை உணர்ந்த நம் முன்னோர் "இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு அன் பொடு புணர்ந்த ஐந்திணை" தன் இயல்பிற் குறையின் கைக்கிளை யிலும், மிகின் பெருந்திணையிலும் சார்தலைக் குறித்தற்கு "நடுவ ணைந்திணை" யாக்கினர். இவ்விருபொருளையு முணர்த்தும் நூல் களும், தொல்காப்பியமுமே நமது பழைய வைப்புச் செல்வம். இவை அறம் பொருளின்பங்களை யெய்துமாறும், வீடுபெறுமாறும் உணர்த்துவன. இவற்றை நோக்குவோர் இதுகாலை மல்கி வரு கின்றனர். இவ்வரவால் தமிழரனைவரும் பழைய சான்றோரினத் திருக்கும் புதிய நலத்தாராவர். இவ்வாக்கம், தமிழ் வளர்ச்சிக்கும், புலவர் தளர்ச்சிக்கும் (குறள் 76, 1299) செவிச்செல்வர் கிளர்ச் சிக்கும் உதவத்தக்கதேயாம்.

(தொடரும்)

---

இச் சிற்றாராய்ச்சிப் பேருரையாளர் வரைந்துதவிய நற்றிணை முல்லைப் பாக்களின் விளக்கவுரை நம் தமிழணங்கு வாயிலாகப் பிறகு வெளிவரும்.

ஆசிரியன்.

---

## மருத்துவம்.

சேவ்வலரியின் சிறப்பு:—

செவ்வலரி மலரை மூலமுளையின்மேல் கனக்கக் கட்டிவரின் அம்முளைகள் இற்று வீழ்ந்து நலம் விளையும். இச் செடியின் இலையடிக் காம்புகளின் பாலை எடுத்து வெண்குட்டம் கண்டுள்ள இடங்களில் கனக்கத் தடவிவரின் அவ்வெண்ணிறம் மாறும்.

இஞ்சி ஷர்பத்து:—இஞ்சி ரசத்தை வேண்டிய அளவுக்கு இரண்டுமணி நேரம் நன்றாகத் தெளிவித்து, இறுத்துக்கொண்டு, அதன் எடைக்கு இருமடங்கு சர்க்கரை கலந்து, காய்ச்சி, மது பாகத்தில் வடித்துக்கொள்க. 1 அல்லது 2 ரூபா எடை உட் கொள்ளின், இரத்தசுத்தம், பித்தசாந்தம், பசிதீபனம் உண்டாம். எடைக்கெடை நீர்கலந்துண்ணல் நலம். —ஒரு மருத்துவன்.

# மகதன்.

திரு. ப. ம. வேணுகோபால நாயுடு அவர்கள்,
தலைமைத் தமிழாசிரியர், இந்து உயர்தரப் பாடசாலை, ஆம்பூர்.

## அத்தியாயம் 1.

"யானைவரும் பின்னே மணியோசை வரும் முன்னே."

**மா**லை மணி ஒன்றரையாயிற்று. வானமும் மாசொன்று மில்லாமல் முனிவருள்ளம்போல் தெளிந்திருந்தது. கதிரவனும் தன்னுடைய கிரணங்களாகிய கைகளைச் செவ்வனே நீட்டிக் காய்ந்துகொண்டிருந்தான். இளவேனிற் காலமாதலால் சோலைகளிலுள்ள தேமா மரங்களில் குயில்கள் களித்துக் கூவிநின்றன. கிளிகள் ஆங்காங்கு மரங்களில் கொஞ்சிக் குலவிநின்றன. பொதும்பரில் சுரும்பினங்கள் இசை பாடின. தங்களைவிட்டுப் பிரிந்து நெடுநாளாக வெளியே சென்றிருந்த தங்கள் கணவன்மாரது வரவு கேட்டுத் தாங்கள் உடுத்திருந்த அழுக்குப்படிந்த ஆடைகளைக் களைந்தெறிந்து அழகிய பட்டாடைகளோடு விளங்கும் கற்புடை மகளிர்போலத் தேமா மரங்களெல்லாம் தமது பழைய இலைகளை உதிர்த்துப் பசுமையான தழைகளோடு விளங்கின. முட்களை அரையிலே யுடையனவாகிய முருக்க மரங்கள் ஆங்காங்குச் செவேலெனப் பூத்திருப்பதை நோக்கின், குளிர்ந்த சோலைகளும் வெயிலுக்கு ஆற்றாமல் தீப்பற்றினவோ என்று கண்டோர் ஐயமுறும்படி யிருந்தது. காஞ்சியின் அரும்புகள் கருநிறமாய் விரிய, அழகிய கிளைகளோடு கூடிய மாமரங்களின் மொட்டுக்கள் வெண்மையாய் வாய் நெகிழ்ந்தன. காயாவின் பூக்கள் கரியவன் மேனிபோன்று நீல நிறத்தனவையாய்ப் பூத்து விளங்கின.

அவ்வாறு விளங்கிய சோலைகளுள் முதன்மையானது தேமாம் பொழில் என்ற ஒன்று. அது மகத மன்னர்களால் வழிவழி வைத்து வளர்க்கப்பெற்றதாதலின் எப்பொழுதும் பிறர் நுழைய வொண்ணாதபடி கட்டுங் காவலுமாக வுள்ளது. அச்சோலையில் எங்குப் பார்த்தாலும் குரவமும், கோங்கும், வேங்கையும், வெண்கடம்பும், சுரபுன்னையும், மகிழமும், மஞ்சாடியும், சண்பகமும், செருந்தியும், மருதமும், பாதிரியும், உச்சிச் செலுந்தியும் நிறைந்து விளங்க, வாழை, தேமா, பலா, கமுகு முதலிய மரங்கள் இடையில் வரிசை வரிசையாய் நிறைந்து அச்சோலையினை அழகு பெறச் செய்யும். அச்சோலை மிகப் பெரியதொன்றாகையினால் அதனிடையே பல உருவங்கள் அமைந்த வாவிகளும், அகன்ற மாடங்கள்போன்ற நீராழி மண்டபங்களோடுகூடிய பெரிய பொற்

ருமரைப் பொய்கைகளும், சிற்பநூல் வல்லோர் அழகுற அமைத்த படித்துறைகளுடன், அவ்விடம் செல்வோர் பலரும் ஒருங்கே நீராடற்குரியனவாகி, சிவந்த கால்விரல்களையுடைய அன்னப் பறவைகள் தங்கள் பெடைகளுடன் அழகாகப் பூத்திருக்கும் தாமரை, செங்கழுநீர், ஆம்பல் முதலியவற்றின் இடையிடையே நீர்மூழ்கி விளையாடுதற் கிடமானவாகிய பலகுளங்களும், வண்ணத்தாலும், வடிவத்தாலும் பலவகைப்பட்டனவாகிய மீனினங்கள் விட்டுவுளர்க் கப்பட்ட சிறு கேணிகளும் ஆங்காங்குத் தோன்ற, அது அழகு பெற்று நின்றது. அச் சோலைக்கு நாற்புறங்களிலும் நான்கு அகன்ற பெரிய வாயில்களும், அவ்வாயில்களின் வழியே உள்ளே செல்வோமாயின், அழகிய நுண்மணல் பரப்பிய வழிகளும், அவ் வழிகளின் ஓரங்களில் எல்லாம் சுண்ணந்தீற்றிய செங்கற்களைச் சாய்த்து வைத்து. அவற்றின் பின்புறத்தில் பல நாடுகளின் பூஞ் செடிகளையும் நட்டு, இடையிடையே பாக்கு மரங்களும், வாழை மரங்களும், கூந்தற் பனைகளும் வைத்துச் செல்வோர் கண்களுக்கு இனிய விருந்தளிப்பதையும், மாலைப்போழ்தில் மகிழ்வுடன் விடை பெற்று உலாவச் செல்வோர் உட்கார்ந்து வேடிக்கையாகப் பேசி உல்லாசமாகக் காலங்கழிப்பதற்கு, மரம், இரும்பு, சுண்ணம்பு, சலவைக்கல் முதலியவற்றால் இயைந்தனவாகிய பல ஆசனங்களும் ஆங்காங்கு விளங்குவதையும் காணலாம். பாதைகளில் செல்லும் போது ஓரங்களில் பூங்கொடிகள் நிறைந்து பூத்து இருப்பதையும், சிற்சில இடங்களில் அவை அருகே உள்ள செடிகளின்மீது படர்ந் தும், பாதைகள் கூடுமிடங்களில் அரசனது வருகையை எதிர் பார்த்து இடப்பெற்ற பூம்பந்தர்கள் எனக் கூறும்படி அவை நன் ருகப் படர்ந்து விளங்குவதையும் பார்க்கலாம்.

தேமாம் பொழிலினிடையே நடுநாயகமென விளங்குவது பூம்புனற் பொய்கை என்ற ஓர் நீர் நிலை. அதன் நடுவில் நீர் மட்டத்துக்குமேல் பத்தடி உயரத்திற்கு விசித்திரமான வேலைப் பாடு செய்து அமைக்கப்பெற்ற உயர்ந்த சலவைக் கற்றூண்கள் ஓராயிரம் நாட்டி, பச்சைக் கற்கள் மேல்மூடிப் பளிங்குக் கற்களைக் கீழே வேய்ந்த ஓரழகிய மண்டபமும், அம்மணிமண்டபத்தின்மேல் ஓர் ஸ்தூபியும், அதன் உச்சியில் நான்கு பெரிய தங்கக் கலசங் களும், அம்மண்டபத்தின் சுற்றுப்புறங்களில் எல்லாம் பல சிறிய கலசங்களும் விளங்கி அதனை அழகுபெறச் செய்யும். அந் நீராழி மண்டபத்து ஆங்காங்குப் பெரிய நிலைக்கண்ணாடிகளும், அணை யிட்ட ஆசனங்களும், அழகிய பூஞ்செடிகளும், பல நாட்டுக் காட்சிப் படங்களும், அரசன், அவனைச் சேர்ந்தார் முதலியோரது உருவப் படங்களும், பல்வகையான கண்ணாடி விளக்குகளும், கண் கவர் வனப்புள்ள பிறநாட்டுப் பொருள்களும், பனி நீரால் நனைந்து தொங்கி உள்ளே இருப்போர்க்குக் குளிர்ச்சிசெய்யும் வெட்டி வேர்ப் பாய்களும் தொங்கி யசைந்து விளங்கின. காற்றை வீசும்

விசிறிகளும், பட்டுத் திரைகளும் அம் மண்டபத்திற்கு அழகூட்டின. அம் மண்டபத்தினிடையே ஓர் மேடையின்மீது அழகிய நவரத்தினங்களால் இழைக்கப்பெற்ற ஓர் ஆசனமும், அதைச் சுற்றித் தந்தக் கிராதிகளும், அவற்றின் முற்புறத்தில் முப்புறத்தும் பல ஆசனங்களும் விளங்கியதைக் கவனித்தால் அவ்விடம் சிற்சில சமயங்களில் பலர் கூடுமிடமாகவும் திகழும் என்பதைக் குறிப்பிக்கும். நீராழி மண்டபத்துக்கும் பொய்கைக் கரைக்கும் சற்றேறக்குறைய அறுநூறு கஜதூர மிருக்கலாம். பொய்கையோ நாற்புறங்களிலும் ஒரே நீளமுள்ளதாய்ச் சதுரமாக விளங்கியது. கரையினின்று நீராழி மண்டபத்துக்குச் செல்லவேண்டியபோது இருபக்கமும் கிராதிகளோடு அமைக்கப்பெற்று விளங்கும் மரப்பாதை ஒன்றுண்டு. பொய்கையில் விளையாட்டுத் தெப்பங்களும், கட்டு மரங்களும், சிறு படகுகளும் மிதந்துகொண்டிருந்தன. நீராழி மண்டபத்திற்கும் பொய்கைக் கரையிலுள்ள திருமகள் உறையுள் என்ற ஓர் பெரிய கட்டிடத்திற்கும் மகதநாட்டு மன்னவனது கொலு மண்டபத்திற்கும், அரண்மனைக்கும் குறுக்கான வழிகள் பல உண்டு. அரசனது அவைக்களத்திலும் மேற்கூறிய மற்றைய விடங்களிலும் ஆராய்ச்சி மணிகள் ஆங்காங்குத் திகழ்ந்தன. அவைக்களத்து ஆராய்ச்சி மணியைக் குறிப்பாக அடித்தால், அம்மணியொலியானது குறித்த கட்டிடங்களில் அரசனிருக்கும் இடங்களில் கேட்கும் தன்மையது. அரசனது பரிவாரங்களும், மெய்காப்பாளரும், அந்நாட்டரசியாகிய கமலினியின் தாதியரிற் சிலரும் திருமகள் உறையுளில் இருந்தார்கள். மகதனும் கமலினியும் தங்களது ஒரே பேறுன ஸ்யமந்தன் என்னும் மகனேடு நீராழி மண்டபத்தில் விளையாடிக்கொண்டும், நீரில் அன்னப் பறவைகள் மூழ்கிமூழ்கி எழுந்திருப்பதைக் கண்டு ஆனந்தமுற்றுமிருந்தார்கள். வெயிலின் கொடுமையும் சற்றுத் தணிய அவர்களுக்குச் சிரமபரிகாரம் செய்வான்போன்று தென்றலம் செல்வனும் வாய்நெகிழ்ந்த மல்லிகை, முல்லை முதலிய நறுமலர்களில் தோய்ந்து நறுமணத்தைக் கொள்ளையாக வாரிவந்து அவர்கள்மீது வீசத் தொடங்கினன். வெளியிலே தொங்கவிடப்பட்டிருந்த வெட்டிவேர்ப் பாய்களும் சுருண்டனவாதலால் அவர்களும் அந்நீராழி மண்டபத்தின் ஓர் புறத்தில் தனித்தனி ஆசனங்களில் உட்கார்ந்து பேசத் தொடங்கினர்.

மகதன்—"என் இன்னுயிர்க் காதலி! எனது இடக் கண்ணும், இடது தோளும் படபடவெனத் துடிக்கின்றன. காரணமொன்று மறிகிலேன். யாதொரு காரணமு மில்லாமல் மனத்தில் பயந்தோன்றுகின்றது; உடம்பில் சோர்வு உண்டாகின்றது. உவகையின் ஊக்கமும் குறைகின்றது. 'யானைவரும் பின்னே மணியோசை வரும் முன்னே' என்பதுபோல இவைகளெல்லாம் எவற்றைக் குறிப்பிக்கத் தோன்றுகின்றனவோ அறிகிலேன்."

கமலினி—"காதல! நேற்று மாலைப் பொழுதில் நானுந் தோழியுமாக நமது உப்பரிகையில் உலாவி வந்தோம். நமது கோட்டையின் உட்புறத்தில் கட்டப்பட்ட பெரிய கொடிமரத்தின்மீது ஒரு காக்கை வந்து உட்கார்ந்தது. மற்றோர் காக்கை அதனைத் துரத்திவர அவை யிரண்டும் ஒன்றோடொன்று போர்புரிந்து கொடி மரத்தின்மீது விழுந்தன. அக்கொடி மரமும் முனை முறிந்தது. துகிலும் காக்கைகளின் கால்பட்டுக் கிழிந்தது. நேற்றை யிரா எனது கனவில் திருமகள்போன்ற ஒரு அழகிய பெண் ஓர் பாலிகையில் விளக்கேற்றி எடுத்துக்கொண்டு 'மகதம் நீங்குவேன், மகதம் நீங்குவேன்' என்று சொல்லிக்கொண்டே, நமது கொலு மண்டபத்திலிருந்து நம்மூரின் வடக்கு வாயிற்புறமாக வெளியே சென்றனள். கனவின் விளைவு இன்னதென அறிந்திலேன். மனமுந் துணுக்கிடுகின்றது. நினைக்கும்போ தெல்லாம் உடல் நடுங்குகின்றது. என்ன வருமோ, எல்லாம் எனையாளு மீசன் செயல்."

மகதன்—"என் கண்மணி! நான் கண்ட கனவினை என்னென்று கூறுவேன். எங்கேயோ காட்டில் ஓரிடத்தில் வேட்டைக்குச் சென்றேன். சென்ற இடத்தில் ஒரு பெரிய மலையடிவாரத்தில் தங்கினேன். அருகில் இருந்த ஒரு முழையில் ஒரு பெரிய ஆண் சிங்கம் தன்னுடைய பெண் சிங்கத்தோடும் குட்டியோடும் வசித்திருந்தது திடீரென்று சில வேங்கைகள் அவற்றை வளைத்துக்கொண்டன. அயர்ந்திருந்த சிங்கம் செய்வகை ஒன்றும் அறியாது அவ்விடம்விட் டோடியது. பெண் சிங்கம் பயந்து மற்றோர் வழியில் பாய்ந்தது. குட்டி பிறிதோர் வழியில் சென்றது. வேங்கைகளும் அரி மந்திரத்தில் நுழைந்து களித்து நின்றன. சிறிது பொறுத்து அம் மூன்று சிங்கங்களும் ஒன்று கூடி அவ்வேங்கைகளின்மீது பாய்ந்து அவற்றைச் சின்னபின்னப் படுத்திப் படுகாடாக்கி வீழ்த்தின. காதலி! இக் கனவு இருந்தபடி கண்டனையா? வருவன வந்தே தீரும். வருந்தி யழைத்தாலும் தாலும் வாராத வாரா, பொருந்துவன போமினென்றால் போகா வல்லவா?

என்று இவ்வாறு அவர்கள் பேசிக்கொண்டிருக்க ஆராய்ச்சி மணியின் ஓசை கேட்டது. அரசனைக் காண அவ்விடம் யாரேனும் வருவார்கள் என்பதை உணர்ந்த கமலினியும் அருகிருந்த பட்டுத் திரையின்பின் சென்று பளிக்கறையில் புக்காள். பொற்றொடரையாள் யென்ற பாங்கியும் லியமந்தனை யழைத்துச் சென்று துறையின் மற்றோர் புறத்தே செல்ல, மகதனும் வந்தவரை உள்ளே விடும்படி தனது சேவகருக்கு உத்தரவளித்து ஆடைகளை யணிந்து மேடையின்மீதுள்ள ஆசனத் தமர்ந்தான். ஐந்து நிமிஷங்கள் ஆகியிருக்கும்; இரண்டுமுறை மணியோசை கேட்டது காவலன் கதவைத் திறக்க, ஓர் போர்வீரன் இரண்டு மூடிய கடிதங்களை அரசனிட மளித்து விடைபெற்றுச் சென்றான். (தொடரும்)

தமிழ்த்தாய் வாழ்க.

## ஔவைத் தமிழ் மாணவர் கழகத்துச்
# சேனாவரையர்
# திருநாட் சொற்பொழிவுகள்.

க.

செங்கம் போர்டு உயர்கலாசாலை

### திரு. ச. கு. இலக்குமணன் அவர்கள்

நிகழ்த்திய விரிவுரை.



தமிழுக்கே தாயகமாக விளங்கும் தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்று பிரிவினையுடையதாய்க் காண்பார்க்கும், கேட்பார்க்கும் பேருவகை தருகின்றது.

இனி ஒல்காப் பெருப்புகழ்த் தொல்காப்பியத்துக்கு, பன்னெடுங் காலத்துக்குப் பிறகு பல அறிஞர்கள் உரை கண்டுள்ளனர். அவர்களுள் சிறப்பானவர்கள் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச் சிலையார் முதலியோர். அவர்களுள் சேனாவரையர் சொல்லதிகாரத்துக்குமட்டும் உரை தந்துள்ளனர். இவர் உரை மற்றெல்லாவற்றையும்விட மிகவும் இன்பந் தருவதொன்று.

சேனாவரையர் காலம்.

இனி, சேனாவரையர் காலம் இன்னதென ஒருவாறு கூற முற்படுகிறேன். சேனாவரையர் காலம் இன்னதெனத் திட்டமாக வகுக்கக் கூடவில்லை. இருப்பினும், "வினையிற் றோன்றும்பாலறி கிளவியும்" (சூத். 11) என்ற சூத்திரத்தின் உரையில் வடமொழியில் பதஞ்சலி முனிவர் எழுதிய யோக வுபாகம் என்னும் நூலைப் பற்றி மொழிந்திருப்பதைக் கொண்டும், "ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்" (சூத். 27) என்னும் சூத்திரத்தில், கன்னி ஞாழல் (சிலப்பதிகாரம் - கானல் வரி - 8) என்னும் உதாரணம் வந்திருப்பதைக் கொண்டும், ஆசிரியர் நக்கீரனர் இயற்றியருளிய திருமுருகாற்றுப்படையி லிருந்து "பன்னிரு கையும் பாற்பட வியற்றி" என்பதைக் கையாண்டிருப்பதாலும் இன்னும் "முரசு முழங்குதானை மூவருங்கூடி" (பொருநராற்றுப் படை 54) (சூத். 33) எனவும், "பவளக் கோட்டு நீலயானை சாதவாகனன் (ஹபனர்)

கோயிலுள்ளு மில்லை" எனவும், "உறற்பால நீக்கலுறுவர்க்கு மாகா" (நாலடியார்) எனவும், வருபவைகளைக்கொண்டு பார்க்குமிடத்து ஆசிரியர் நக்கீரர், பதஞ்சலி முனிவர், சிலப்பதிகார ஆசிரியர் ஆகியவர்கள் காலத்துக்கு இவர் பிற்பட்டவரென்று தெரிய வருகிறது. பவளக் கோட்டு நீலயானை சாதவாகனன் கோயிலுள்ளு மில்லை என்பதற்கு வேறோர் பொருளுங் கொள்ளக் கிடக்கின்றது. இவர் வடநூற்கடலை நிலைகண்டுணர்ந்தவராதலால் அவ் வடநூலுக்கு இலக்கணம் வகுத்த பாணினி, வரருசி முதலானோர்கள் காலத்தில் சாதவாகனன் என்னும் ஓர் மன்னனிருந்ததாகவும், அவன் தேவியினருளால் ஆறே திங்களில் இலக்கண முற்றும் தெரிந்துகொண்டதாகவும் ஒரு கதை சொல்லப்படுகிறது. ஒருகால் இவராற் குறித்த வரசன் அச் சாதவாகனனாகவிருக்கலாமோ என நினைக்க இடமிருக்கிறது. எனினும் இவருடைய உரையில் சூத்திரம் 65-ல் நிலப்பெயர், குடிப்பெயர் என்னும் சூத்திரத்தில் பட்டி புத்திரர் என்று வருவதைப் பார்த்தால், இவராற் குறிப்பிடப்பட்ட பட்டி என்பவர் வடநாட்டை யாண்டு வந்த குப்தகுல வரசர்களில் இரண்டாம் சந்திரகுப்தன் அல்லது விக்கிரமாதித்தியருடைய மந்திரி பட்டியாமென நன்கு விளங்குகிறது. ஆகவே இவர் விக்கிரமாதித்தன் காலத்துக்குச் சற்றுப் பிற்பட்டவரெனத் தெரிகிறது. இவர் வடுகக் கருநாடரைப்பற்றிக் குறிப்பிட்டிருப்பதைக் கொண்டு இவர் காலம் நருமதைக்கும், கிருஷ்ண நதிக்குமிடையே யாண்டுவந்த ஆந்திரர்களுக்கும் பிற்பட்டவரெனத் தெரிகிறது. இவர் தம் உரையில் எங்கும் புராணங்களைக் கையாளாதிருப்பதுதான் வியப்பாகவிருக்கிறது. இவர் தம்முரையில் தெய்வச்சிலையார் முதலிய யாரையும் குறிப்பிடாதிருப்பதைப் பார்த்தால், இவர் அவ்விருவர்க்கும் முற்பட்டவரென்றே தெரிகின்றது. நச்சினார்க்கினியர் தாம் எழுதிய சொல்லதிகார வுரையில் இவர் கூறிய சிலவற்றை மறுக்கின்றனர். ஆகலால் இவர் நச்சினார்க்கினியர்க்கு முற்பட்டவரென்று தெரிகிறது.

### சேனவரையர் பிறப்பிடம்.

இனி, சேனவரையர் பிறப்பிடம் இன்னதெனக் குறிப்பிட்டுச் சொல்ல முடியவில்லை. ஆனால் "கருவூர்க்குச் செல்லாயோ சாத்தா" (சூத். 13), "கருவூரின் கிழக்கு" (சூத். 77), "கருவூர்க்குக் கிழக்கு" (சூத். 110) எனவும், "உறையூர்க் கயனின்ற சிராப்பள்ளிக் குன்றை" (சூத். 80), அம்பர்கிழான் பேரூர்கிழான்

(சூத். 165) எனவும் வருவதால் பேரூர், உறையூர், கருவூர் என்ற இடங்கள் இவர் அறிந்தனவாகலாம். அதனுல் இவர் அப்பக்கங்களைச் சேர்ந்தவராக இருக்கலாம் என்று எண்ணக்கிடக்கிறது.

சேனுவரையர் உரைகாணும் நயம்.

உரை காண்பதில் மிக்க வல்லவரான சேனுவரையர் தொல்காப்பியச் சூத்திரங்கட்கு உரை தந்ததோடுமட்டும் நில்லாமல் தாமே சில சுவை ததும்பும் சொற்களைக்கொண்டு விளக்கிக் காட்டியுள்ளார். அவற்றுள் ஒரு சிலவற்றை மட்டும் ஈண்டுக் காட்டுவாம்.

1. கிளவியாக்கத்துக்குப் பொருள் கூறுகையில் வழுக்களைந்து சொற்களையாக்கிக் கொண்டமையால் இவ்வியல் கிளவியாக்கமாயிற்று. நொய்யும் நுறுங்குங் களைந்து அரிசியமைத்தாரை அரிசியாக்கினு ரென்ப. மக்கள் என்பது மக்கள் என்னும் உணர்வை.

2. விசேடித்தல் இருவகை. (*a*) இயைபின்மை நீக்கிய விசேடணம். (*b*) பிறிதின் இயைபு நீக்கிய விசேடணம்.

3. குறிப்பு, மனத்தானுணரப் படுவது. பண்பு, பொறியானுணரப் படுவது.

4. அடுக்கு ஒருசொல்லது விகாரம்.

சேனுவரையர் காலத்துள்ள சில வழக்குகள்.

“அறிவு முதலாயினவற்றுன் ஆண்மகன் சிறந்தமையின்” என்றதால் இவர் காலத்து ஆண் மக்கள், பெண் மக்களைவிட அறிவிற் சிறந்தவர் என்ற கொள்கை மிகுதியாக விருந்தது போலும்.

“கல்லு மிட்டிகையும் பெய்து குற்றுச் செய்யப்பட்ட நிலம்” என்றதால் அக்காலத்தில் கருங்கல், செங்கல் பொடி முதலியவைகளை யிடித்துக் கெட்டியாக்கின இடங்கள் கட்டப்பட்டிருப்பன போலும். (சூத். 19).

“கடுக்கலந்த கைபிழியெண்ணெய் பெற்றமையான் மயிர் நல்லனவாயின” என்றதால் இக்காலத்துத் தலைமயிருக்குச் சிறந்த தைலங்கள் இருப்பதுபோல இவர்காலத்துக் கடுக்காயினுல் தயாரிக்கப்பட்ட தைலத்தை மக்கள் உபயோகப்படுத்திவிருப்பார்போலும்.

"யானை நூல் வல்லானொருவன் காட்டுட் போவுழி" (சூத். 37) என்பதனால் இவர் காலத்தில் மிருக நூல் வல்லார் நிரம்ப விருந்தார் என்று தெரிகிறது. அதிலும் யானை நூல் வல்லன் என்று குறிப்பிடுவதால் அக்காலத்து மக்கட்கு விலங்கு நூல் ஆராய்ச்சியும் உண்டு எனத் தெரிகிறது. (தொடரும்)

உ.

செங்கம் போர்டு பெண் பாடசாலை

## திரு. துளசி அம்மையார் அவர்கள்

நிகழ்த்திய சொற்பொழிவு.

சேனாவரையர் என்பவர் தொல்காப்பியச் சொல்லதிகாரத்துக்கு உரையெழுதிய ஆசிரியருள் ஒருவர் என்பதை இத்திருநாள் அழைப்பிலேயே விளங்கக் கண்டிருக்கின்றோம். சொல்லதிகாரமென்பது தொல்காப்பியத்துள் காணப்படும் மூவகை யதிகாரங்களுள் நடுமணியாய்த் திகழ்வது. தொல்காப்பியமென்னும் தமிழ் இலக்கணப் பெருநூல் மூன்று பெரும் பகுதிகளையுடையது. அவற்றுள் முதலாவது எழுத்ததிகாரம், நடுவணது சொல்லதிகாரம், கடையது பொருளதிகாரம். உலகியலுக்கு அறமும், பொருளும், இன்பமும் இருப்பதுபோல மொழியுலகுக்கு இந்த எழுத்தும், சொல்லும், பொருளும் அமைந்திருக்கின்றன. உலகியலில் பொருள் இல்லையானால் ஏனை அறமும் இன்பமுமாகிய இரண்டும் இல்லையாம். பொருள் இருந்தால் அறம் செயலாம்; இன்பம் நுகரலாம். இதுபோலவே சொல்லிலக்கண அறிவு இருந்தால் எழுத்தறிந்து பிழையின்றி எழுதவோ பேசவோ செய்யலாம். பொருளறிந்து அதன் இன்பத்தை நுகரலாம். ஆகவே உலக வாழ்விற்குப் பொருள்போல அறிவுடைய வாழ்வுக்கு சொல்லிலக்கணம். அஃதாவது சொல்லதிகாரம் மிகவும் இன்றியமையாத ஒன்றென்பது பெறப்படும்.

இந்தச் சிறப்பை யறிந்து மக்கட்குச் சொல்லிலக்கண அறிவைப் பரப்பவேண்டுமென்று கருதி முயன்ற அறிஞர் பண்டை நாளில் பலராவர். எழுத்ததிகாரத்துக்கு இளம்பூரணர், நச்சினார்க்கினியர் என்ற இருவர் உரைகளே கிடைத்திருக்கின்றன. பொருளதிகாரத்துக்கு நச்சினார்க்கினியர், பேராசிரியர், இளம்பூரணர் என்ற மூவர் உரை யெழுதியிருக்கின்றனர். ஆனால் நடுவணதாகிய சொல்லதிகாரத்துக்கு மட்டில் இளம்பூரணர், சேனாவரை

யர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர் என ஐவர் உரை யெழுதியிருக்கின்றனர். இன்னும் ஒரு பழைய உரையும் கிடைத்திருக்கிறது. ஆனால் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இதனாலும் இச் சொல்லதிகாரத்தின் சிறப்பு இனிது தெளியப்படும்.

தமிழ் இலக்கண உலகில் ஒரு பழமொழி வழங்குகிறது. "எழுத்துக்கு இளம்பூரணம், சொல்லுக்குச் சேனாவரையம், பொருளுக்கு நச்சினார்க்கினியம்" என்பது அப் பழமொழி. பழமொழிகளெல்லாம் உண்மையை அடிப்படையாகக் கொண்டவை. உண்மைக்கு என்றும் அழிவு கிடையாது. அதனால்தான் பழமொழிகள் எக்காலத்தும் பழமொழிகளாகவே விளங்குகின்றன. அதனால் இந்தப் பழமொழியும் உண்மையை அடிப்படையாகக் கொண்டது என்று அறியலாம். ஆகவே சொல்லதிகாரத்துக்கு உள்ள உரைகளில் சேனாவரைய ருரையே மிகச் சிறந்தது என்பதும் நன்கு தெளிவாகும்.

சேனாவரையர் இன்ன மரபினர் என்றும், இன்ன காலத்தவர் என்றும் இனிது வரையறுத்துக் காணக்கூடிய நிலையில் இல்லை. இவர் தமிழ் நூல்களையே அன்றி வட நூல்களையும் குற்றமறக் கற்றுத் தெளிந்த அறிவு படைத்தவர். இவரது தருக்க ஞானம் மிக நுட்பமானது. இவர் இனிமையாகப் பேசி யாவரையும் இன்புறுத்தும் இயல்பினர். நச்சினார்க்கினியர் முதலியோரைப்போலக் கொண்டதையே சாதிக்கும் குறுகிய மனப்பான்மை யுடையோரல்லர். இனி இக் கருத்துக்களை இவரது உரையைக்கொண்டே தெளியக் காணலாம்.

ஒரு பொருளுக்கு ஓர் இலக்கணம் கூறவேண்டுமானால் அந்த இலக்கணத்துக்கு அதிவியாப்தி, அவ்வியாப்தி, அசம்பவம் என்ற மூவகைக் குற்றங்களுள் ஒன்றும் இருக்கக்கூடாது என்பது தருக்க நூல் முடிபு. அந்த முடிபைத் துணையாகக்கொண்டு, வினைச் சொற்களைப்பற்றிக் கூறும், தொல்காப்பியச் சூத்திரத்துக்கு உரை கூறுமிடத்து மிக அழகாக இலக்கணங் காட்டுகிறார். "வினை யெனப்படுவது வேற்றுமை கொள்ளாது நினையுங்காலைக் காலமொடு தோன்றும்" என்பது அச் சூத்திரம். இதன் உரையில் அதிவியாப்தி, அவ்வியாப்தி, அசம்பவம் என்ற தருக்கநெறிச் சொற்களைத் தொடுத்துப் படிப்பவர்களுக்கு அச்சத்தை உண்டுபண்ணுவது முறையன்று என்று கருதி மிக்க நயமாக உரை கூறுகின்றார்.

வினையெனப்படுவது வேற்றுமைகொள்ளாது என்று சொல்லாமல், வினையெனப்படுவது நினையுங்காலை காலமொடு தோன்றும் என்போமானால் வேற்றுமைகொள்ளாத ஏனை இடையுரிகளும் வினைச் சொல்லாகிவிடும். அதனால் அதிவியாப்தி என்னும் குற்றம் வரும். காலமொடு தோன்றும் என்று சொல்லாவிடில் பெயர்ச்சொற்களும் வினைச்சொற்கள் என்று சொல்லப்பட்டு அதிவியாப்தி என்ற குற்றம் வரும். இதனை மிக்க நயமும், எளிமையும் தோன்ற "வேற்றுமை கொள்ளாதென்னாது காலமொடு தோன்றுமெனின் தொழிநிலை யொட்டும் தொழிற்பெயரும் வினைச் சொல்லாவான் செல்லுமாகலானும், காலமொடு தோன்றுமென்னாது வேற்றுமைகொள்ளாதெனின், இடைச்சொல்லும் உரிச்சொல்லும் வினைச்சொல் எனப்படுமாகலானும், அவ்விரு திறமும் நீக்குதற்கு வேற்றுமைகொள்ளாது காலமொடு தோன்றும் என்றார்" என்றார். இப்படியே கடினமான வடநூல் தருக்க இலக்கண முடிபுகளை மொழிபெயர்த்தும், எளிமையாக எடுத்தோதியும் விளக்கிச் செல்லுகின்றார். அயோக வியவச்சேதம், அந்நியயோக வியவச்சேதம் என்பன முதலிய வடநூல் முடிபுகளை பிறிதின் இயைபு நீக்கல், இயைபு இன்மை நீக்கல் என எளிதாக மொழிபெயர்ப்பர். இதனை வடநூலார் யோக விபாவ மென்ப; இதனைத் தாது வென்ப; இதனை நேய மென்ப என்றெல்லாம் எளிதாகக் கூறிச்செல்வர். இவ்வாறே மேலே கூறிய இவரது குணஞ் செயல்களை வற்புறுத்துதற்கு வேண்டிய சான்றுகள் பல இவ்வுரையில் கிடக்கின்றன. அவற்றை இங்கு எடுத்தோதின் பெருகும்.

இவரது உரையின்கண் நாம் அனைவரும் என்றும் நினைவிலிருத்தக்கூடிய மொழிகள் பல கிடக்கின்றன. "அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் நான்கும் இழுக்கா இயன்றது அறம்" என அறம் நான்கு வகையாய் நடக்குமென ஆசிரியர் திருவள்ளுவர் வகுத்தனர். ஆகவே அழுக்காறின்மை, அவாவின்மை, வெகுளியின்மை, இன்னாச்சொல்லின்மை என்ற நான்கும் ஒருசேர நின்றவழி அறமாம் என்பது அறநூல் முடிபு. இதனைக் கருத்திற்கொண்டு அறமாவது அழுக்காறின்மை என்று சொல்லுவோமானால், மற்ற வெகுளியின்மை முதலாயின அறமாகுமோ, ஆகாவோ என ஓர் ஐயம் பிறக்கும். அதனால் அறமாவது அழுக்காறின்மை என்று சொல்லியவழி அழுக்காறின்மை அறமாவது என்று கொள்ளப்படும். "னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்"

என்ற சூத்திரத்துக்கு ஒரு கருத்துரைக்கின்றார். அறத்துக்கு அழுக்காறின்மை முதலிய பல இருப்பதுபோல, ஆண்பாலை அறிவதற்குச் சில ஈற்றெழுத்துக்கள் உண்டு. அவற்றுள், னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல் என்றால் மற்ற எழுத்துக்கள் ஆடூஉ அறிசொற்கு ஆகுமோ, ஆகாவோ என ஐயத்திற்கு இடமாம். அதனால் னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல் என்றாரேனும் ஆடூஉ அறிசொல் னஃகான் ஒற்றையும் ஈற்றெழுத்தாகக் கொள்ளும் என விளங்குகிறது. இதனை "அறமாவது அழுக்காறின்மை என்றாற் போல னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல் என்றாராயினும், ஆடூஉ அறிசொல்லாவது னஃகான் ஒற்றென்பது கருத்தாகக் கொள்க," என்று கூறுகின்றார். (தொடரும்)

ரு.

செங்கம் போர்டு உயர்கலாசாலை ஆசிரியர்

## திரு. வேதாத்திரி பிள்ளை, B.A., L.T., அவர்கள்

### நிகழ்த்திய சொற்பொழிவு.

**யா**ன் சேனாவரையரைப்பற்றிப் பேசப்போவது அவரது தொல்காப்பியச் சொல்லதிகார உரை ஒன்றைக்கொண்டேயாதலால், அந் நூலைப்பற்றியே ஒரு சில மொழிகள் முன்னே கூறினால் பின் யான் பேசுவதற்கு அது சிறிது துணையாயிருக்குமென்று எண்ணுகிறேன். ஆதலால் முதலில் தொல்காப்பியர் தமது சொல்லிலக்கணத்தை எவ்வாறு கூறுகின்றார் என்பதைச் சுருக்கிக் கூறுகின்றேன்.

தொல்காப்பியர் சொல்லிலக்கணத்தை ஒன்பது இயல்களாக வகுத்து, முதலியனுள் சொற் பாகுபாட்டினை உணர்த்துகின்றார் பின் எழுவகைச் சொல் வழுக்களை நீக்கிச் சொற்களை ஆக்கிக் கொள்ளுகின்றார். இவ்வாறு கொள்ளுகின்றவர் சிறப்பாகச் செப்பினையும், வினாவினையும் எவ்வாறு வழுவாமற் போற்றவேண்டுமென்றும், இயற்கை, செயற்கைப் பொருள்களை எவ்வாறு கிளத்தல் வேண்டுமென்றும், ஐயப் பொருள்களை எவ்வாறு கூறுதல்வேண்டுமென்றும் இவைபோன்ற பொதுவிலக்கணத்தின் பகுதியினை விரிவாக வுரைக்கின்றார்.

இரண்டு, மூன்று, நான்காவது இயல்களுள் சொற்களின் பொதுவிலக்கணத்தின் மற்றோர் சிறந்த பகுதியாகிய வேற்றுமை

யிலக்கணத்தினை யோதுகின்றார். இதனை இரண்டாவது இயலி னுள்ள எழுவகை வேற்றுமைகளையும், ஒவ்வொன்றும் எந்தெந்தப் பொருளில் வருமென்பதையும், மூன்றாவது இயலுள் வேற்றுமை கள் தம்முள் மயங்கும் மயக்கங்களாகிய பொருள் மயக்கம், உருபு மயக்கம் என்பவைகளையும், பொருள் மயக்கமாகிய ஒன்றன் பொருட்கள் ஒன்றசேரல் என்ற ஒப்புமையான் ஆகுபெயரையும், பெயருக்குப் பொதுவிலக்கணம் வேற்றுமை யிலக்கணம் என்பது போல், வினையின் பொதுவிலக்கணமாகிய தொழில் முதல் நிலை எட்டு என்பதையும், நான்காவது இயலினுள்ள எட்டாவது வேற்று மையாகிய விளிவேற்றுமையும், எந்தெந்தப் பெயர்கள் விளியேற்கு மென்பதையும், அவ்வாறு ஏற்குங்கால் எவ்வெம்மாறுதல்களை அடையும் என்பதையும் விரிவாக வோதுகின்றார்.

எனவே, முதல் நான்கோத்துக்களால் சொற்களின் பொது இலக்கணத்தை உணர்த்தி, அடுத்த நான்கோத்துக்களால் சொற் களின் சிறப்பிலக்கணத்தைக் கூறுகின்றார். முதலில் சொற்களைப் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என நான்கு வகைப்படுத்தி, ஐந்தாவது இயலுள் பெயர்ச்சொற்களை உயர்திணைக் குரியன, அஃறிணைக் குரியன, அவ்விரு திணைக்கும் ஒத்த உரிமையுடையன என மூவகைப் படுத்திப் பின் ஒவ்வொன் றைப்பற்றி விரித்தோதினார். ஆறாவதியலுள் பெயரிலக்கணத்தை யுணர்த்தியதுபோல, வினையையும் மூவகைப் படுத்தி, உயர்திணைக் குரியனவற்றைப் பன்மைத் தன்மை, ஒருமைத் தன்மை, பன்மைப் படர்க்கை, ஒருமைப் படர்க்கை என நால்வகைப் படுத்தி அவை களைப் பொருள் வகையானும், வாய்பாட்டு வகையானும், ஈற்று வகையானும் உணர்த்தினார். அஃறிணைக்குரியவற்றைப் படர்க் கைப் பன்மை, படர்க்கை யொருமை என இருவகைப் படுத்திக் கூறினார். இருதிணைக்கும் ஒத்த உரிமையுடையவற்றை முன்னிலை, வியங்கோள், என்பன முதலாக எட்டுவகைப் படுத்தி ஆங்காங்குத் தெரிநிலை குறிப்பு என வினையை யிருவகைப்படுத்தி யுணர்த்தி, முடிவில் வினைச்சொற்களின்மேல் நிகழும் காலவழு, மரபுவழு முதலியவைகளை அமைத்துச் சொற்களின் சிறப்பிலக்கணத்தின் ஒரு பகுதியினைக் கூறி முடிக்கின்றார்.

சிறப்பிலக்கணத்தின் மற்றோர் பகுதி இடையியலும், உரி யியலுமாகும். ஏழாவது இயலாகிய இடையியலுள் இடைச் சொற்களின் இயல்புகளைப் பொதுவாகவும், சிறப்பாகவும் கூறி.

அவற்றுள் தத்தங் குறிப்பால் பொருள் செய்குனவாகிய ஏகாரம், ஓகாரம், மன், சொல், தில், உம்மைபோன்ற சுமார் நாற்பது சொற்களை எடுத்தோதினர். எட்டாவதாகிய உரியியலுள் இடைச்சொல் லிலக்கணத்தைக் கூறியதுபோலவே முதலில் அவை இசை, குறிப்பு, பண்புபற்றி வருமென்றும், பயிலாத உரிச்சொற்களாகிய உறு, தவ, நனிபோன்ற சுமார் நூற்றிருபது உரிச்சொற்களின் இலக்கணங்களையே எடுத்தோதியும் பொருள் கூறியும் முடிக்கின்றார்.

கடைசியாக மேலியல்களுள் சரியான இயல்புபற்றி உரைக்க முடியாதெனவும், எஞ்சி நின்றனவுமாகிய பல அரிய இலக்கணங்களாகிய இயற்சொல், திரிசொல் போன்ற நான்குவகைச் சொற்களைப் பற்றியும், சொற்கள் செய்யுளில் விகாரப்படுகின்றவைகளையும், அறுவகைத் தொகைச் சொற்களையும், பத்துவகை எச்சங்களையும், அவையல் கிளவி, குறைச்சொற் கிளவி என்பவற்றைப் பற்றியும், இவைபோல்வன பிறவற்றையும் விரிவாக வுணர்த்துகின்றார்.

சேனாவரையர் தமது தொல்காப்பியச் சொல்லதிகார விரிவுரையினைப் பெரிதும் விரும்பிப் படிக்கத்தகுந்த முறையில் ஆக்கியுள்ளார். இது வினாவிடை முறையினும், ஒருவகைச் சொற்போர் முறையினும் இருக்கின்றது. மேலும் இஃது இக்காலத்தில் ஒலி பெருக்கிக் கருவியின்மூலமாய் ஆசிரியர் மாணாக்கனுக்குச் சிலவற்றைச் சொல்லிக்கொடுக்கும் முறையினும் பெரிதும் இருக்கின்றதெனலாம். இது பெரும்பாலும் இலக்கணங்கள் விதிகளும், விலக்குகளுமாகத் தொகுக்கப் பெற்றனவாக இல்லாமல், இந்த முறையிலிருப்பது இவர் நூற்குள்ள ஒரு தனிச் சிறப்பெனலாம். இதில் பல இடங்களில் ஆசிரியர் ஒன்றைக் கூறினதும், மாணாக்கன் "அஃதேல்" என்று தொடங்கிக் கேள்வி கேட்பதும், அதற்கு ஆசிரியர் "நன்று சொன்னாய்" என்று தொடங்கி விடையளிப்பதுமான முறை, இவர் இந்நூலைப் படிக்கும் மாணாக்கர் உள்ளத்தில் தமது உரையைப் படிக்கப்புகும்போது எழும் ஊக்கமும், விருப்பமும் முடிவுவரையில் நிலைபெற்றிருக்குமாறு இருக்கின்றது.

(தொடரும்)

268

# மதிப்புரை.

## இந்திரா :

திரு ராம பழனியப்ப செட்டியார் அவர்களை ஆசிரியராகக் கொண்டு செட்டிநாட்டினின்று வெளிவரும் ஒரு சிறந்த மாத வெளியீடு. இதன் முதன் மலரின் மூன்று மிதழ் (பிப்ரவரி 1, 1941) நம் பார்வைக்கு வரப்பெற்றோம். சுமார் 110 பக்கங்களுக்கு மேற்கொண்டு விளங்கும் அவ்விதழ், படிப்போர் கண்ணையும் கருத்தையும் கவரும் கவினும் கட்டுரைகளும் நிறைந்து விளங்குவது கண்டு மகிழ்ந்தோம். தமிழுலகிற் றலைசிறந்து விளங்கும் பேரறிஞர் பலர் வரைந்த கட்டுரைகள் அவ்விதழில் தமிழ்நயந் ததும்புமாறு மிளிர்கின்றன. அன்றியும், சமூக முன்னேற்றத்திற் குரிய முறையில் மாதர் பகுதி, சிறுவர் பகுதி முதலியன சிறந்து விளங்குகின்றன. இலக்கண இலக்கிய உணர்ச்சியூட்டும் பொன்னுரைகளும், கைத்தொழில், உழவு, வாணிபம் முதலியவற்றிற் கேற்ற பொருண் மொழிகளும், இசை நாடகங்களுக் கியைந்த அரும்பெருரைகளும், யாவர்க்கும் மனமகிழ்ச்சியை விளைவிக்கும் நகைச்சுவைத் துணுக்குகளும், உடல்நல வழிகளுக் கேற்ற நல்லுரைகளும், வாழ்க்கைச் சித்திரங்களாகிய சிறு கதைகளும், பண்டைத் தமிழர் மாண்பை விளக்குமுறைக்குரிய அகப்பொருட் கதைத் தொடர்களும், செவிக் கின்பந் தரும் நாட்டுப் பாடல்களும் நிறைந்து, கலையறிவுப் போட்டி முதலிய ஊட்டாட்டங்களும் உடையதாய், தமிழுலகில் தனக்குத் தானே இணையென்று விளங்குந் திங்கள் வெளியீடு இஃதொன்றே.

இவ் வெளியீடு தமிழ் மக்கள் ஒவ்வொருவர்க்கும் உறுதுணையாகுந் தகுதியுடையதாம்.

இவ் வரிய புதிய வெளியீடு என்றும் நின்று நிலவி, தமிழ்க்கும் தமிழர்க்கும் சிறந்த பயன் விளைத்து வீறி விளங்குமாறு இறையருளை இறைஞ்சுகின்றோம்.

| | இந்தியா, சிலோன். | பர்மா. | மலேயா. |
|---|---|---|---|
| ஆண்டு வரி | 1—8—0 | 2—0—0 | 2—8—0. |

தனி இதழ் இரண்டணா.

இதனைப் பெற விரும்புவோர் விவரங்களுக்கு, மானேஜர், இந்திரா, செட்டிநாடு, இராமநாதபுரம் ஜில்லா, எஸ். ஐ. ஆர். என்னும் முகவரிக் கெழுதுக.

ஆசிரியன்.